உ

சிவமயம்.

ஸ்ரீ சவுடநாயகி பேரில்

# சூடாம்பிகைமஞ்சரி.

இஃது

கொச்சிசமஸ்தானம்

வல்லங்கிமாநகரில் வசிக்கும்

சீதாராமசெட்டியார் அவர்கள் குமாரர்

**சவுடப்பசெட்டியாரால்**

பாடப்பட்டு

ஷையூர் ச. கந்தப்பன் என்றழைக்கிர குள்ளத்தம்மன்செட்டியார்

கொல்லங்கோடு ல. தம்மன்செட்டியார்

சித்தூர் பொ. அனந்தய்யன்செட்டியார்

உடுமலைப்பேட்டை வெ. கு. கந்தசாமிசெட்டியார்,

ஷை பெ. தி. அருணசலம் செட்டியார்

இவர்கள் வேண்டுகோளின்படி

Mr: F. Scott Son of Mr: Petter Scott of
Cannanore Malabar.

வல்லங்கி மகா-ா-ஸ்ரீ காத்தமுத்துக்கோனர் அவர்கள் குமாரர்

நாச்சிமுத்துக்கோனர்

பொள்ளாச்சி தாலூக்கா கோட்டூர் மகா-ா-ஸ்ரீ

வெள்ளையன்செட்டியார் அவர்கள் குமாரர்

சின்னப்பன்செட்டியார்

இவர்கள் பொருளுதவியினால்

ஷை சவுடப்பசெட்டியாரவர்களால்

பாலக்காடு சுல்த்தான் பேட்டை

**விக்டோரியா பிரஸில்**

பதிப்பிக்கப்பட்டது.

1914.

இதன் விலை அணா 1.

சுபமஸ்து.

# சாத்துக்கவி.

## வல்லங்கி சோ. அப்புக்குட்டிசெட்டியாரால் பாடப்பட்டது.



---

திங்களில்மாரிமூன்றும் பெய்திடத்திகழ்வுற்றோங்கி
பங்கமில்கழனிதன்னில் பன்மணிநிகர்க்கும்செந்நெல்
எங்குமேநிரையமல்கும் யெழில்வளவல்லங்கிவாழும்
எங்கள்நெல்க்குளத்தியம்மை யிணையடிதலைமேற்கொண்டோன்

ஈசனுர்க்கினியதவங்களையியற்றி யிடப்புரத்தமைந்தயென்னம்மை
தாசனுமினியதமிள்க்குரைவிரிக்கும் தகமைபூண்சவுடப்பனெழுதும்
மாசிலாதொளிரும்மஞ்சரிதனின்வாய் மருவியமருவெடுத்துரைக்க
பேசுமிவ்வுலகின்முடியுமோவெனவே பேசினேன்பெருமையினுலே

பத்திமிகப்பெருக்கெடுத்துபாடுமிந்த மஞ்சரிக்கிபரிசுதானும்
சித்தமுடனீய்ந்திடவும்பொருள்போதா தாகையினல்சிறப்புவாய்ந்த
புத்திரருமெனும்பொருளும் பொன்பொருளும் கலைபொருளும்புவியினுனை
மைத்துனனும்அப்புகுட்டியெடுத்துரைத்தேன் புவிமிசையின்மகிழ்விஞேடு.

---

## ஷையூர் செ. கிருஷ்ணன்செட்டியாரால் பாடப்பட்டது.

ஞானநாயகனுரிடத்தினிதமர்ந்த நவை பிலாசவுடநாயகிமேல்
வானவர்முதலோர்புகழுமஞ்சரியின் வயங்கியசுவையிணைப்பருகின்
தேனெடுகெனியும்தெள்ளியவமுதும் தெகிட்டிடுமென்பரிப்புவியில்
எனமாம்கிருஷ்ணன்நாமமாம்யானு மெடுத்துறைத்தனனிவணம்மா.

---

## ஷையூர் தி. ஒன்னகிரிசெட்டியாரால் பாடப்பட்டது.

சரதகோலோச்சும்கொச்சி சற்குணநகரின்சீரார்
சிரசுவல்லங்கிவாழும் சிரந்ததோர்சவுடப்பேந்திரன்
விரதமாய்பரைமேல்பாடும் விந்தைமஞ்சரியைக்கேட்டோர்
அரிகுழலோசைகேட்ட அமரர்போல்வாழ்வரன்றே.

---



உ

முருகேசர்துணை.

# சூடாம்பிகைமஞ்சரி.

திருவளரும்வல்லங்கிச்செழுநகரி லரியணைமேற்றிகழ்ந்துதோன்றி
கருணையெனுமழைபொழியும் சுவுடநாயகிமீதிற்களிப்பினோடு
விரியுமலரனையசூடாம்பிகை மஞ்சரியதனைவிளம்பமுக்கட்
கரிமுகவன்றாளிணையான் கருத்திடையேவைத்திதனைக் கழறுவேனே.

வெள்ளியாற்றாமரையினுதித்துவரு மின்கொடியேவிமலரேத்தும்
தெள்ளியநற்பாகனையசொற்கிளியே கலைமகளேதெளிவாயெந்த
னுள்ளமதிற்குடியிருந்துசூடாம்பிகை மஞ்சரியதனையுலகமேற்க
கள்ளமிலாதுரைத்திடுவாய் கண்மணியேகல்வியெனும் பொருளானாளே. 2

சுந்திரஞ்சேர்நந்தவனம் சூழ்பழனுபுரிமலையிற் றுலங்கிமாய்கை
மந்திரமாருற்பவித்த வரக்கரையாண்டடித்துருட்டி மலமற்றாருள்
இந்திரனார்தன்மகளைமணம்புரிந்து வள்ளிதனையியல்பால்வேட்டும்
கந்தனெனுங்கற்பகமே யென்மனதிற்குடியிருப்பாய் கவலைதீர. 3

## அவையடக்கம்.

வேலவராம்கற்பகத்தின்நிழலிருக்கும் வித்தகரேவெழியேன்சொல்லும்
கோலமுருமஞ்சரியின்குற்றமுறி னவைகளெலாம்குணமாய்க்கொண்டு
பாலகனைப்பவித்திரமாய்ச்செய்வதெலா நும்கடமைபாவைதானும்
சாலவுமேநதிகளையும்குறைவனவெண் ணாதுகொளும்சாட்சியேல. 4

## வல்லங்கிநகர் நாட்டுச்சிரப்பு.

வெண்மையுற்றிடுமேகமேமலர் மகழ்நானெனவிளங்கி
தண்மைசேர்கடலடைந்து நற்புனலினைத்தகவாய்
வண்மையாகவுண்டரியென வந்துமுன்கொழிக்கும்
ஒண்மையாகசௌடாம்பிகை யுதவியவசம்போல். 5

முடங்குளைமேலெழுந்தருளும் சவுடநாயகிபதிகமுனிவினோடு
திடம்பெரவேவந்தெதிர்க்கு மரக்கரையேவதைத்திடவுந்தி மையோடு
வடம்புனையும்முரசடித்துவாளயிலை வீசியதூவண்மைபோலும்
தடம்புனைந்தவந்தரத்துமின்னியிடி யிடித்துமழைதருகுமாதோ 6

இருளெனவடர்ந்தவரக்கரைத்தடிய யிலகியதேவலன்றனக்கு
கருணையையளிக்கும்கவுரியின்றானை கடுகியேசெல்வதைக்கடுக்கும்
விரிவுருமேகம்பொழிந்திடும்பயமார் விளங்கியதாபரமெலவும்
அரியதோல்கரடியுளவையிவ்வனைத்தும் அரற்றியேகொடுசெலுநதியும் 7

நாயகராகும்பருதியும்சசியும் நகர்ந்திடுமளவையிற்றலைசாய்த்
தோய்வுருநளினம்குமுதமென்றிவற்றை யொருவழிதேருதல்புரிய
நேயமோடணுகும்நெறியினையொக்கும் நிகரிலாமதுநுகரளியும்
ஓய்விலாதிரைந்துவவற்றிடையணுகி யொழுகியபிரசத்தையருந்தும் 8

வேறு.

எங்குமாநதிகறங்கியோடுவதி லெங்கணும்மனநதீசமும்
பங்கமின்றியிது செல்வநெங்களொரு பாவையாகுபகீரதி
துங்கமோடுசவுடாம்பிகைக்கிமலர் சூடவும்மனமளிக்கவும்
பொங்கியோடுவதாகுமேபுலமை பூண்டவர்க்குசொலலாகுமோ. 9

வேறு.

நகர்தனக்கழியமைத்ததோயெவரும் நாடியசெயல்முடித்திடவும்
சுகமுறக்குடைந்துபத்தியைப்பெருக்கப் பன்னியருடுசுரரணுகி
மிகபடிந்திடவங்கெழுந்ததோயெனவே மீறியேநகர்தனைச்சூழ்ந்து
நிகரிலர்தொழுகும்நதியினின்சிரப்பை நீநிலத்துரைக்கவுமாமோ. 10

ஜலத்தினிற்றிகழும்பங்கையமீது ஜம்புவின்கனிபொதிந்திருக்க
வுலப்புருமிரவுவந்தடைந்ததென்றஞ்சி ஒய்யெனகுமுதத்தையடையும்
நலத்தகுகுமுதம்விரிந்திடாதிருக்க நாணமேற்கொண்டளிநவிலும்
மலப்பொடுபகலுமிரவிதற்கிலையோ மானமுமில்லையோவெனவே. 11

வேறு.

நதிகரைநிலைகொளு நாவற்கிளைமிசை நனிவோ
குதிகொளுவானர கிளைகளசைக்கக் குளிர்நீரின்
வுதிரகிளைக்கனி குக்குளுகுளுவென் றொழியாதால்
மதியிலரேலநக் கொருகிளைமிசை மருவிடுமால் 12

பொய்கையின்நீரைப் பொய்யிடைமாதர் பொற்கரகத்
தொய்யெனமொண்டு மீளுவதளவே யொருமாதின்
கைநழுவிடவப் படிசிலைமீது கடமோட
வையமதிர்க்க டண்டண்டண்டென வருமொலியே. 13

வேறு.

தென்னையுங்கமுகும்வாழையுந்தாளை சிரந்திடும்வருக்கையும்தேக்கும்
புன்னையுமரசுசெண்பகமுதலாம் பூந்தருவுருத்தெழுந்தோங்கி
மின்னலைத்தடிந்துகற்பகக்காவை மிடைந்துநற்கயிலையையடையும்
அன்னதேவலன்சீராமோதநகரி னரசளித்தமர்வெனவாகும். 14

வேறு.

வண்டுகிள்ளைமயில்குயில்பருந்து சிறுவால்நிமிர்ந்தகருக்குருவியும்
தண்டுகாகமுதலானதெல்லவும் தருக்களேரிசுரநதிதனில்
வுண்டுமீண்டுவுடுமீனினங்களை யுலாவியெங்குமுணவாமெனக்
கொண்டுகூவிதுயில்கின்றமாமரம் குளிரவெங்கணுநிற்குமால். 15

வேறு.

புளிதருதருகருகிளைமிசை யூகம்பொலிவோடு
களியொடுமேவியசைத்திட வதனுட்கனிசிந்தி
இளகிலவாகும்தரைபட செவிடுக்கிசைவாக
முளவினமேலப்பப்பட படவெனமுந்துறுமால். 16

வேறு.

முல்லைதும்பையொடுமருகுபிச்சைமுழு நீலசூதமுறையேவிரித்
தெல்லையற்றவளவாகநிற்பதிது வெம்மையாளுசவுடம்மையை
மெல்லவேயுமதுபாதமீதிலெமை சேர்க்வென்றுமிகமெலிவபோல்
வல்லையாக்குவமஞ்சலீரென வரிகள்வந்துவயங்குமால். 17

வேறு.

வளஞ்செரிந்தெழுந்தநெற்கதிரோங்கி வானெலாம்பரவியங்கடர்த்து
இளம்பிறைநுதல்வேற்கண்ணியரனைய யிசைவுறத்தலைகவிழ்ந்திலங்கும்
தளம்புனைந்தொளிரும்மலர்சிகைமுடிக்கும் சவுடநாயகிதருவரத்தை
வுளங்கனிந்தேற்கசிரங்குனிப்பவரை யொக்குமின்னகர்வயல்தனிலே. 18

வேறு.

அல்லுமிங்குயினியில்லையில்லையென வழகுவாய்ந்ததருக்களும்
வில்லிடும்மலர்சோலைவாவிகள் விளங்குமாநதிதடாகமும்
மல்லல்சூழுவல்லங்கிமாநகர் முழுதுமாடமும்கூடமும்
சொல்லுதற்கரிதாகவோங்குந் துலங்குமாமணிமண்டபம். 19

வேறு.

மணியேநிரையக்கொடுசெயு மாடமிசைமாதர்
அணியாயொன்றித்தருமலர் கொய்தங்கணிவாரும்
துணைமேரனையப்பூண்முலையசையத் துணிவோடும்
அணைவாயையயாவென்று கைகொட்டியாடுவராம். 20

ஆடாநின்றவம்மடமாதர் அறிவோடும்
பீடாய்செய்தவோவிய மித்தைப்பிரிவாகத்
தேடாநிற்பின்றேர்கிலராகித் திகைப்பாராம்
யீடாயிவருக்கெங்கணுமில்லை யிணையென்பார். 21

வேறு.

சந்தனம்நடிக்குமனையவேநடிக்கும் சந்தனங்கொண்டவர்சால
முந்நூறுமேடைமுந்தியேகங்கை முந்தியேமுந்தியேமொண்டு
சிந்துவர்சந்தம்சிந்துரவெங்கும் சிந்தனைசிந்தையிற்செய்து
சந்தனம்குறையாதந்திசாமந்தி சார்ந்திடும்வனத்திடைசாரும். 22

கொடியிடைதுவளக்கொடிதெனவோங்கும் கொடியிடைதுவளவந்தடர்த்து
படர்நெடுமாடமிசைபடர்மேகம் படர்சிகையணிகுவர்பரிவால்
குடையுருவிலியைக்கொடுநுதல்சேர்த்திக் குடைரசமாமெனமொழியார்
அடல்பொருமதனுணடர்குதியாளன் அடல்பொரவெனவிடுக்குவரால். 23

கரும்புளுமிரைக்ககரும்புளுமொலிக்க கரும்புளுங்கலித்திடக்காமப்
பெரும்புலிபிடிக்கபெரும்பணிப்பகைவன்பெற்றியைப்போல்வளர்ந்திலங்கும்
நருங்கொளுமுலையார்நறும்புனலேந்தி நறுமலர்ச்சோலைவாய்நடந்து
வருந்திருநெறியில்வருந்தியங்கமர்வர் வறும்வரைநிகர்புயவாளர். 24

கங்கையிற்குடைந்துகங்கையைக்கொடுபோய் கங்கைதன்சிரமிசைக் கவிழ்த்
தங்கமின்மலரைத்தங்கையினேந்தி தங்கியமுறையொடுசாத்தி [து
கங்கணமிளற்றகங்கணமடைய கங்கரமிசையெடுத்தேந்தி
பங்கஜமோடுபங்கஜம்பதிய பாரிடைபணிகுவர்பரிவால். 25

இன்னனநிகழ்த்தும்கன்னியர்யாரென் றெண்ணிடாதிருக்கவிங்கிசைப்பாம்
பன்னகமணிந்தாள்கருணையேவடிவாய் பரந்திடும்தேவலர்மாதர்
கன்னியர்பிராங்கவரவர்க்குடைய தேவனைதேவியைக்கருத்தாய்
நன்னயமோடுபூசைகள்தினமும் நடத்தியேவாழ்குவர்நலமே. 26

திங்களைத்தரித்தோன்றிருவுளத்துதித்த திலகனும்தேவலன்மரபில்
பொங்கியேவளரும்புண்ணியசீலர் புனலிடைகாலையிற்படிந்து
பங்கமில்லறியர்நீர்தரித்தெவரும் பாங்கொடுசித்தியகடனை
துங்கமோடியற்றிகங்கையின்பாங்கர் துலங்கியசோலையிற்செல்வார். 27

சோலையிற்செல்வார்சுடர்மலரெடுப்பார் ஜோதியாம்சவுடாயகியின்
ஆலயம்புகுவார்மஞ்சனமாட்டி அழகியகுங்குமமணிவார்
கோலமாமலரைசூட்டுவார்மிகவே குறைவிலாப்பூசைகளியற்றி
ஞாலமேற்படிந்துதுதித்திடும்பெருமை நாகரால்சொல்லவுமாமோ. 28

சங்கரியுமையேசவுடாயகியே சாமண்டிசாம்பவிராம
லிங்கர்பங்குறையும்தங்கமேராம லிங்கமுமெல்லவும்தானுய்
எங்குமேதுலங்குமீஸ்பரியெனவே யிடைவிடாதேத்திடும்மொலியார்
பொங்கியபுணரியொலியினையழித்து புரந்தரன்நகரெனப்பொலியும். 29

ஆண்டகையானோர்வாணிபப்பெருக்கும் அழகியகுடிகளின்சிறப்பும்
மூண்டமர்துலைக்கும்கரிபரிவகுப்பும் முடிவிலாநிரையதிகரிப்பும்
பாண்டவர்தூதன்பத்தினியருளும் பகருணுதெய்வவுற்சவமும்
பூண்டநன்மவுலிமலரயனாலும் புகன்றிடவெழிதினிற்போமோ. 30

வேறு.

சிங்கமெனுமூர்த்தியின்மேற் றிகழ்வோடெய்தி
சிறப்புடையவென்மகனே தேவலாநின்
பங்கமிலாமரபினரோ டுன்னையென்றும்
பக்குவமாய்காத்திடுவோம் பயமீக்கொள்ளேல்
எங்கெனை நீர்நினைந்திடினு மங்குயானும்
எழுந்தருளிவரந்தருவோ மென்றுமுன்னம்
சங்கையிலாவரமளித்த வுமையாள்கோவில்
சங்கதியையிங்கெடுத்து சாற்றலுற்றும். 31

வேறு.

மேருவைப்பழித்தும்மின்னலைப்பரித்தும் மிளிர்தருமணியெலாமெடுத்து
சேரவேயமைத்துசெய்ததோவலரி செழித்திடுமண்டலமாமோ
மாரிலாசசிதன்மண்டலமிதுவோ வென்றெவர்மயங்கிடவமைத்த
சீருலாசவுடாயகிமுன்றிற் சிரப்புடனமைத்தகோபுரயாம். 32

வேணியைவிழுங்கிவெளியினைக்கடந்து விளங்கியவண்டத்தையொருவி
காணுதற்கரியபித்திகைநீங்கி கதிர்குவைகுவையெனவொழுக்கும்
தூணிநுட்டோன்றும்துளவணிபரமன் தூயமில்லவனைவைதனின்வாய்
காணியவேண்டிவிராட்டுருக்கொண்ட தன்மையைகோபுரம்கடுக்கும். 33

திங்களிவ்வுனையகோபுரநிலையைத் தாண்டியேசென்றிடத்திகைத்து
பங்கமுற்றவனுய்பலகணிவாயில் வழியினிற்பாய்குவனதனுல்
துங்கமுமொருவிகளங்கனென்றெவரும் துணிவொடுபுகல்வதையறிந்து
சங்கையுற்றவனுய்தேய்மதியாகி தாரகையுடனிலங்கினனுல். 34

விரியுமெவ்விருளும்விலகிடவெழுந்து விளங்கிடவுலகெலாம்விரிந்த
மருதியின்னெடியகோபுரச்செயலைப் பார்த்தவன்பயங்கொளவெழுந்து
மருவுலாசவுடநாயகியனையை மகிழ்வுடன்வலமிடமாக
சரிவரத்தொழுவானெனச்செயல்காட்டி சார்குவன்வருடமீர்பிரிவாய். 35

மாலையோவுடுக்கண்மதிபுமோவொளிகொள் மாலையின்னவேதாய்வயங்கும்
கோலமார்நடுநாயகமிதுகொல்லோ சோதிலாவரம்பையர்முதலாம்
சீலமார்மாதர்பதுமமோபத்தி சிரந்தெழுந்தோங்கினதெனவே
ஞாலமேல்நிவர்ந்துவானெலாமறைந்து நலிவிலாகோபுரமிலங்கும். 36

பொன்மலைபோலுமம்மலைமீது பொலிவுறுசுரர்நகர்போலும்
நன்னயமோடுவதனிடைவயங்கும் நாகர்களேலவும்நடிக்கும்
துன்னியசிகரமதன்மிசையனமும் துலங்கியபத்தியும்பித்தி
இன்னலிலாதுவகித்தெழுந்தோங்கி இலங்கியகோபுரமாகும். 37

வானெலாம்பரவியெழுந்தொளிர்சிரந்து வாசவனிருக்கையையணுகி
ஞானநாயகனுண்டமர்தருபோலும் நலிவிலாப்பவிழமல்லிகைகீழ்
வானவர்தொழும்சீர்கரிமுகக்கடவுள் வயங்குவார்வடக்கொருபுடைசார்
ஆனதோர்செயலாற்பவிழவிக்னேச ராகியநாமம்வந்ததுவே. 38

இரண்டோன்காருயிருநவமுப்பா னிரண்டொடுமெருபதுநான்கும்
திரண்டொருதொண்ணூற்ருரிவைகிளையாய் தினகரனவிரெனத்திகழ்ந்து
வுருண்டடிநான்குநான்கெனவே வுறைந்திடும்பவிழமல்லிகைகீழ்
கரண்டகங்கவிழ்த்தகரிமுகனடியைத் தொழுபவர்கவலைதீர்குவரால். 39

பவிழவிக்னேசரடிபணிந்தவர்கள் பண்பொடுகெனதனவானுய்
நவநிதிபெறுவர்புத்திரபாக்யம் நாடியிப்புவிசுகமனைத்தும்
பவமிலாதருந்திபருதியும்சசியும் பகீரதியுள்ளளவுலகின்
சிவனருள்பரமபவிழவிக்னேசர் சீர்த்திபோல்வாழ்குவர் சிறப்பால். 40

அடைவடைசுகியன் அவில்பொரிகடலை அழகியகன்னலுங் கதலி
கடைதயிர்மதுவும் கனிபலகுளமும் கஞ்சயாமலரெருக் கருகும்
அடியவர்க்கடியன் பவிழவிக்னேசர் அடியில்வைத் தடிபணிவோர்கள்
மடையராகிடினும் மன்னராய்புவியை மகிழ்வுடனாள்குவர் மாதோ. 41

வேறு.

கோடிரிந் துவடமலையேடதாய் கொண்டுபாரதம்தீட்டியகோமளன்
பாடமர்ந்தபயோததிநாப்பணின் பாந்தள்பாயலெனப்பள்ளிகொண்டவன்
மூடனாகியவெந் துயர்நீக்கவே முறுவலோடுவிளங்கியிருந்திடும்
பீடெடுத்தெவருகிலுமிங்ஙனம் பேசிமுடியாதெனப்பேசலாம். 42

நீலமாமணியோடுவைடூரியம் நீலமால்வரையோடுகைலாயமும்
கோலமார்கருமேகம்செம்மேகமும் கோதிலாதநீலோற்பலம்தாமரை
சாலவேயொருசார்புறைபோலவே சலசையோடரியென்குறைநீக்கவே
சீலமோடரியாதனமீதமர் சிறப்பையாணிவண் செப்பவுமாகுமோ. 43

வேறு.

இன்னனநிகழும்நகர்க்குதென்கீழில் யீசனார்கோவிலொன்றுளது
அன்னதற்குடக்குநெல்க்குளத்தம்மை யாலயமதற்குதென்கீழில்
பன்னகமணிந்தோனாலயமதற்கு பாங்கொருநதியுளமேற்கு
சென்னியில்மதியைச்சூடியபரமன் சிரந்திடுங்கோவிலுமுளதே. 44

பக்கம்விக்னேசர்கோவிலும்பாங்கர் பள்ளியான்கோவிலும்வடக்கு
நக்கனார்கோவில்நதியுளவடகீழ் நாகமேலணிந்தவர்கோவில்
ஒக்கயிவ்வனைத்தும்நகர்க்குமஞ்சரியா மொல்லையிற்றனபதியாவர்
விக்கினந்தீர்வர்அளப்பிலாப்பவிசு விளங்கிடும்தொழுபவரெவர்க்கும். 45

பூருவம்மாரியம்மைஸ்ரீகுரும்பை அம்மையும்புராரிசேயிவர்கள்
மாரிலாவமரும்கோவில்கள்கடையின் மருகின்வாய்தேவலர்மருகின்
சீருலாசவுடநாயகியதிவீரேஸ்பரர் கோவில்கள்சிரப்பும்
பேருலாசவுடநாயகிரதத்தில் பிணிப்புரும்வடமெனப்பிரங்கும். 46

நாலொடுமூன்றும்நவையிலாதொருநால் நலத்தையுமளித்தவளாகி
வேலொடுவரமுங்கொடுத்தயன்றனையே விலங்கிடும்புதல்வனைவிடுத்து
மாலொடுமலைந்தவரக்கரைக்கடிந்து மன்னவனாகியேமதுரை
கோலொடுவிளங்கும்சவுடநாயகியை குறைவிலாத்தோத்திரம்செய்வாம். 47

---

## சவுடநாயகிபேரில் ஸ்தோத்திரம்.

---

சங்கநிதிபதுமநிதிசுரபிசிந்தாமணி சாரசப்பொய்கைசோலை
சத்யலோகத்தினையொத்தமந்தாரமும் சரிவரவளர்ந்தகமுகும்
இங்கிதமதாகவளர்தென்னையுங்கன்னலும் யிகழ்வில்சம்பங்கிகோங்கு
யியல்புரச்சூழ்ந்தவல்லங்கிதேவாங்கர் தம்மிடர்களைத்தீர்க்கவந்த
சங்கரிசடாதரிபராபரிமயேஸ்பரி சவுடேஸ்பரிபஞ்சாட்சரி
சகரமதநூருடன்பெனுங்கொண்டபடைவீடு தாராபுரத்தில்வாழும்
சிங்கவாகனிராமலிங்கரோடிங்குவெகு சீக்கிரம்வருகவருக
சிவகாமசுந்தரிசவுடப்பனுக்குதவி செய்யவருதிரிசூலியே. 48

தேடரியநான்மாகூடத்திலுற்றிடும் தென்னவன்புதல்விகௌரி
தெளியதேன்சுவையினுட்சுவையதாய்விளங்கிடும் தேவியேவருகவருக
வாடியேகடனாளியாகியும்பகைவரால் வருந்தவோவெனைப்படைத்தாய்
வஞ்சநெஞ்சுடையவர்க்கஞ்சியெத்தினைகாலம் வாழ்வதும்தெரியவில்லை
கோடிகுற்றங்கடான்செய்திருக்கினுமுன்னைக் கும்பிடிற்றீருமென்று
கூறுசாஸ்திரங்களும்பொய்யாச்சுதோவலது கோபமென்மீதிலுண்டோ
பாடல்பெருவல்லங்கிப்பதியுறைசூடாம்பிகை பட்சமாய்கார்த்திடாயேல்
பாவிநானிருந்தென்னபிராணனை விடுத்திடுவென்பழியுனக்கெய்துமம்மா. 49

தருமமோருருவாகியெங்கும்துலங்கிடும் தற்பரானந்தஜோதி
தரணிதனிலெனைப்போன்ற பாவிகளுமில்லையே தயவுசெய்தாளொணாதா
இரவின்றிபகலின்றியிடமின்றிடமின்றி யினியவுன்பூசையின்றி
இன்சொல்லுரைத்தென்னையன்பாகபோஷிக்கு மில்லாளுமின்றியன்பு
தருமிஷ்டர்பந்துக்களின்றியேபசிக்குணவு தானுமேயின்றியிந்த
தரணியிற்பேயனாய்பிதற்றியேதிரிவதுன் தன்மைக்குவழகுதானோ
திருவருட்கொண்டவல்லங்கிவளர்சீலியே சிங்காரவல்லியுமையே
திரிலோகமெண்ணும் சவுடீஸ்பரித்தங்கமே தேடரியவரகமணியே. 50

பாவந்தனைச்சுடும்பாவையேவுன்கமல பாதமேகதியென்றுநான்
பகலிரவுமுழுவதும்துதிப்பதும்தெரிந்திலாய் பாவியென்றெண்ணியெண்ணி
கோவத்தினாலென்னைகைநழுவவிட்டயோ குரத்தலையர்கையிலென்னை
கூட்டிக்கொடுத்திடநினைந்தையோ நினைந்திடில்கொடும்பழியுனக்கில்லையோ
மூவர்க்குமுதல்வியாயிருந்தென்னபயனென்று மூவுலகமேசுமையோ
முழுமூடனாகியவெனக்காகயிவ்வசைகள் முழுவதும்யேற்கலாமோ
தேவலன்றனக்காகவசுரரைச்செற்றிடும் தேவியென்றுயர்நீக்குவாய்
தேனொழுகுசோலைசூழ்வல்லங்கிநகர்வளரும் தேவியேசாமண்டியே. 51

மண்டலமுதற்கொண்டுவெண்டிசையெலாம் போற்றும்மகமாயிநீலிசீலி
மயில்வேலனைப்பெற்றமாணிக்க தீபமேமரகதமலைப்புதல்வியே
கண்டவர்பொருட்கெலாமாசைமேற்கொண்டிடும் கள்வருக்கனந்தபாக்யம்
கனமானபவிசுடன்புத்ரபாக்யங்களும் கணக்கிலாதளிக்கின்றனை
சண்டாளனாகினும்வுன்புதல்வனல்லையோ சதிகாரனென்றுயெந்தன்
சகலபாக்யங்களும்போக்கடித்தனையுனது சாமர்த்தியமோவரிகிலேன்
மண்டலம்வரைவளரும்நெல்வயல்களும்சோலை மலியும்வல்லங்கிவாழும்
மங்களசுமங்கலிசங்கரிசவுடீஸ்பரி மறைமுடியிலாடுமயிலே. 52

முடிவிலாவுத்தமிசத்திசிவநாரணி மூவுலகையாண்டமூர்த்தி
மூலமாய்நின்றிடும்பிரணவசொரூபியே முத்தமிழ்க்குகந்ததேவி
குடிலையேகுமரனைப்பெற்றிடும்தேவியே யிக்கொடியநென்பழிசெய்தனன்
கோபமோமனமதிற்ருபமோவறிகிலேன் குற்றமெத்தினைசெய்கினும்
அடியருக்கடியர்தம்மடியினிற்பொடியதா யாதரிப்பாயென்னையே
அல்லையேல்கதியொன்றுமில்லையேயினியெனது வாருயிர்துரக்கநன்று
படியினில்இப்பழிசுமந்துநீயிருந்திடாய் பம்பையொடுகெம்பொலிக்கும்
பகறேணுவல்லங்கிபதியுறைசூடாம்பிகை பரமசிங்காரிவுமையே. 53

சிங்காரமங்கையேகங்காதரன்பங்கில் சேரும்நத்தீன்றமுத்தே
சின்மயானந்தமேயென்மீதுவர்ம்மமோ சிவானந்தநாதவொளியே
தங்கமாமயில்வரும்முருகனுக்கன்றுநீ சரவணப்பொய்கைசார்ந்து
தனத்தில்வருமமுதமொருகலத்திலேற்றவருக்கு தயவுடன்கொடுத்தநீயும்
எங்களநாயகியாகியெங்கும்துலங்கிடும் யீஸ்பரியெனதுசொல்லை
எற்காமலும்துயரைநீக்காமலும் நீயிருப்பதும்வழகுதானோ
பொங்கியேவருகின்றகங்கைசூழ்வல்லங்கி புரியினிற்குலாவுமயிலே
பொங்கரவணிந்தசிவசங்கரிசாமண்டியே பூவையேபூவினொளியே. 44

பூவையேபொன்னடிகள்நம்புமடியார்கள்துயர் போக்குதற்கரியவிலையோ
புராரிசிவகாரணிவரூகிகிருபாகரி யெனப்புகலுவோர்கள்வறுமை
ஆவலாய்த்தீர்க்கவெம்மம்மையல்லாற்பிரிது வாருளர்களென்றவேதம்
அடியோடுசாய்ந்ததோயிடியேருபட்டதோ வறிகிலேனறிவிலாதார்
கோவித்தனந்தமாய்திட்டியேவைகினும் கொடியர்தம்துயர்நீக்கியே
குறைவிலாச்செல்வமும்கொடுக்கின்றதேதுனது குருட்டுத்தனங்கடானோ
மாவுபலபூகைநிரைசோலைசூழ்வல்லங்கி மானகரிலங்கவோங்கும்
மங்கையேசாமண்டியிங்கிதசங்காளியே மனதில்வளர்மாணிக்கமே. 55

மனதில்வளர்தீபமேயுனதுசெயலாரறிவர் மகிமைபெருமுனிவர்தேவர்
மறையுணர்தபோதனர்குகையிலுருயோகிகள் மனமெலிவிலாதுயாகம்
அனுதினநடாத்திடும்பிருடிகளுமெண்கணன் அட்டதிக்குற்றபேரும்
அலைகடற்றுயில்கொளும்சக்கரத்தண்ணலும் அயிராணிகேழ்வனும்
மனதினிற்கெட்டாதுவருத்தமேற்கொண்டுதம் மனமெலிவுகொள்வரென்று
மனிதப்புழுக்களில்கடைகேடனையான் மகிமையறியக்கூடுமோ [ல்
பனிவரையெனப்புகலும்சோலைசூழ்வல்லங்கி பதியில்நடமாடுமயிலே
பங்கயக்கண்ணிசிங்காரசாமண்டியே பையரவணிந்தமணியே. 56

அரவினையணிந்திடும்அய்யரும்நீயுமே யரியடர்வனத்திநெப்றி
அழகிலாவேடுருத்தாங்கியேநாயுடன் அர்ச்சுனன்றனதுமுன்றில்
திரமுடன்யாமெய்தபன்றியைக்கொல்வதுன் றிரமின்றறிவமென்று
திட்டியேவாதாடிகோபமேற்கொண்டவன் சிரமிசையடித்தவடியால்
பரதவித்தரிவற்றுகங்கைமதிமுறையிட்டு பஞ்சையாய்த்திரிந்தசெயலால்
பத்தரைக்காத்திடமறந்ததோவுங்களது பாசாங்கிலொன்றுதானோ
சிரியவன்வுந்தனுக்கெதிரியோவல்லவே சிரப்புரும்சோலைசூழும்
சிங்காரவல்லங்கிநகர்மேவுசாமண்டி தேவியேசிரந்தமயிலே. 57

அன்னையேயென்துயரமாறுதவங்கியா யடருதேயென்செய்குவன்
அனலிலிடுமெழுகதாயுருகுதேமேனியும் அருமையோடென்னையன்பாய்
பின்னங்களின்றியேகார்க்கின்றபேரையும் பெரியதுயர்பரவைவீழ்த்தி
பிரட்டியுன்முனிவெலாம்தீர்த்தயோஅன்னையே பிள்ளையார்தனைப்பிடித்த
நன்னயமிலாதசனியரசினைப்பிடித்ததே யெனநவிலுமுறையினேல
நடந்ததேபழஞ்சொலுறைகடந்திடக்கூடுமோ நவையிலாமணிவிளக்கே
தென்னையுங்கன்னலும்சூழும்வல்லங்கியின் றெருவினிற்றுலங்குமனமே
தேடரியதேவலன்மரபில்வருதேவாங்கர் தேவியேசாமண்டியே 58

மாதாகியெவ்வுயிர்க்காதாரமாகியும் மனமாகியறிவுமாகி
மாயமாய்மானபிமானமுந்தானாகி மலராகிமணமுமாகி
ஆதாரமாகியெவ்வுயிரினுள்ளுயிராகி ஆனந்தமயமுமாகி
அண்டரண்டங்களுமடங்கலுந்தானாகு மரகரசிவாநந்தியே
கோதானபோதினும்கைவிடுதல்நலமன்று கோதினையகற்றியெற்கு
குறைவிலாப்பொருளுதவிரட்சிப்பதுன்கடமை குவலயமளித்தமயிலே
வாதாடவென்றெழும்மாமரச்சோலைசூழ் வல்லங்கிதன்னில்வாழும்
வசையிலாமணிமகுடமணியும்சவுடேஸ்பரி வனமயிடசங்காரியே. 59

வேறு.

அல்லலெனுந் துயர்தவிர்க்குமருங்கிளியே செங்கனி
தொல்லைவெள்ளிமலைதுலங்கும் சுந்தரியேமந்திரமாய்
கல்லவளைவுலகமெலாம் வகுத்தளித்தமின்கொடியே வல்லங்கிவாழுமெ
நல்லரசக்கனியமிர்தே சவுடநாயகிமணியே நலமிக்காளே. 60

ஐயரவையணிந்தவளே பரகெதியைத்தருபவளே பகைஞரானோர்
நையசெயல்செய்தவளே நாயகனுரிடத்தமர்ந்த நவையில்லாளே
உய்யும்வகையறிந்திலனே வுத்தமியேபொற்கொடியேவுமையேயிந்த
வையகத்தோர்மதித்திடும் வல்லங்கிசவுடீஸ்பரியே வரத்தினுளே. 61

தாயாகுந்தற்பரமே அற்புதமேபொற்குயிலே தயவுகூர்ந்து
சேயாகுமென்மனதிற் குடியிருக்கும்துயர்தவிர்த்து செல்வரோடு
மாயாதநிதியளிப்பாய் வல்லங்கிமாநகரில் மகிழ்வினோடும்
ஓயாதுவரமளிக்கும் சவுடநாயகிசிவையே வுயர்ந்ததேனே. 62

மதம்பிடித்தவொட்டனையும் மருவியொருசெட்டிதனைப் பெற்றமாதே
கதம்பெடுத்தபரிகள்விற்ற களவினையங்கணைந்திலையோ காமமீறி
பதங்குலவும்கிங்கிணிகள் பலதிசையும்ஒலித்திடவே பண்பினோடு
நிதங்கமழும்வல்லங்கிவாழ் சவுடநாயகியே நெறிநின்றாளே. 63

வேடுவத்திபொய்யிடைச்சி வித்தகத்திமுப்புரத்தி விறகாளத்தி
கூடலத்திகேடகத்தி குக்குடத்திநற்குணத்தி கொடிச்சிபேச்சி
பீடுடைச்சிசெஞ்சடைச்சி பிரபலத்திகுளிர்முகத்தி பெருநாளத்தி
பாடல்புனைவல்லங்கி பதியுடைச்சிசாமண்டி பரிவாரத்தி. 64

பொக்கணத்திமுக்கணத்தி புயல்நிரத்திபெருமலைச்சி புகலவொண்ணு
செக்கரிளம்பிறைமுடிச்சி செண்பகத்திகங்கணத்தி சிவத்தியானத்தி
தொக்குமிடைதானுடைச்சி தொல்லரவைதானணிச்சிதுரச்சியாச்சி
ஐக்கணத்திமைக்கணிச்சி வல்லங்கிசாமண்டி குணவரத்திகீர்த்தி. 65

வேறு.

வினைநம்புமடியருக்கினியபொருளுதவியே வோயாதுநித்தநித்தம்
வுன்னடியைபூசித்துவண்மையாய்வாழவர முதவாதிருப்பதென்ன
வணமோடுநல்லறிவுதீர்க்காயுளைப்பெற்ற மைந்தரைவழங்கிடாது
வையகத்தோரிகழச்செய்வதும்தர்மமோ வான்முதலனைத்துமுன்னை
நினையளவுவாகிலும்மதிக்குமோமுன்கர்வ நீரத்தைக்காட்டலாமோ
திவ்யகுணபிரதாபகருணையங்கடலமுதே திட்டுவதுகஷ்டத்தினால்
மனமதிற்கொண்டிடாதெனையாளவேண்டுமே மயில்வளருசோலைசூழும்
லையாளவல்லங்கிநகர்மேவுசாமண்டி மகமாயிகவுரியுமையே. 66

...திருவிழியுமிருந்துமென்ன
...கோபுரமிருந்தென்ன சிறப்புடன்திருவிழாக்கள்
எங்... தன்னமலர்களா லேத்தியர்ச்சித்துமென்ன
...யகியென்று துங்கமோடுறைத்தென்ன யேசியுமாவதென்ன
பங்கமில்லாச்சிவிகைமீதுவைத்தெங்கணும் பவனிவந்தாலுமென்ன
பலவிதத்தாலுனக்கரியபொருள்தேடியே பத்தியோடிருந்துமென்ன
பொங்குமரவாபரணமணிந்தென்னகோவிலைப் புதுக்கியும்ஆவதென்ன
புகழ்பெருகுவல்லங்கிநகருறையும்சாமண்டி பூவையேகுணபாவையே. 67

இருவேளைபூசைகளியற்றுவதிலென்னவுன் யினியநாமங்களைத்தான்
இரவுபகலின்றியேஜபித்தென்னவாத்தியம் யிடைவிடாதடித்துமென்ன
அரிதானபந்தலிட்டலங்கரித்தென்ன முத்தாலாத்தியேந்தியென்ன
அமிர்தத்தையொத்தநற்பாயசமளித்தென்ன அடியராயிருந்துமென்ன
குருடியென்றுந்தனைக்கூப்பிடினுமென்னவெகு கோலங்கள்செய்துமென்ன
குமரனெனையோனையைபெற்றென்னமகுடனை கொடியவதைசெய்துமென்ன
அரகராயான்படுந்துன்பத்தைநீக்கிடா தன்னையேவுந்தனுக்கு
அந்தமிகுவல்லங்கிவந்தவினைநீக்கிடும் அம்மையேசவுடம்மையே. 68

வேறு.

அந்தமாகுமுக்கோணத்துநாப்பணின் அரியதாகியவட்சரமொன்றதாய்
விந்தையோடுவிளங்கிடுமன்னமே வெய்யதானவியாதியினாலேயோ
சிந்தைநொந்துமெலிகுரனேயிதை தீர்த்திடமருந்தொன்றுனக்கில்லையோ
கந்தமாமறச்சோலைசூழ்வல்லங்கி கன்னியேசவுடீஸ்பரியன்னமே. 69

வேறு.

தண்ணுறுளிதருமாமலர்புனை வாலைதயாளி
பெண்ணுய்வலைதனின்மேவிய பிரமைக்கடலொருவ
கண்ணுய்மரையருள்கூறுவாய் வல்லங்கியின்கடிபூண்
வுண்ணுமுலைசவுடீஸ்பரி வுமையேகுண்மணியே. 70

தேவாரம்.

பொன்னரிடையாளே வொயிலாளே குயிலாளே
அன்னையெனையாளாகிலோ வடியேனெங்ஙனுய்வன்
பன்னளுனைப்பணிந்தும் யெனைப்பாராமுகமான
தென்னேயதைமொழியாய் சவுடீஸ்பரியெனன்னய். 71

கல்லாமதியாலேயுனைக் கள்வியெனசொற்றேன்
நல்லமதிவரவேயருள் நாட்டாய்குணமூட்டாய்
சொல்லால்முடியாததுரைமானே செழுந்தேனே
எல்லாமுணர்சவுடீஸ்பரி என்னயகிவருவாய். 72

மாதாயிவண்வருவாய் வரந்தருவாய் செயலறிவாய்
ஆதாரமுநீயன்றினி யாரிங்குளருறவு
யேதோவெனவெண்ணுதினி யேழைமுகம்பாரும்
தாதாசவுடீஸ்பரியென் தாயேவருவாயே. 73

வேறு.

சிங்கவாகனியே செழுந்தங்கமே செங்கனியே
மங்காமாமலரே மாயன்தங்கையே மாங்குயிலே
கொங்குசெண்பகமும் குளிர்கொன்றை மலர்மலியும்
துங்கார்வல்லங்கி வாழ்சவுடீஸ்பரி தூய்மணியே. 74

பேயும்அரவுளுவை பெரும்பிடாரி யெமனனைய
காயும்துயர்மருவி யான்காலங் கழித்திடவோ
சேயேனுன்னை விட்டேனென்று சிந்தையில்வையாதே
தாயேசாமண்டியே மலர்தாரணி கண்மணியே. 75

மைந்தன்தவித்திருக்க மாதாமாணிக்கத் தண்டிகையின்
அந்நோயேறிவரவுனக் காகுமோஅம்மையரே
நிந்தையாமிதுவும்மிக நீதியன்றேயெவரும்
முந்தியுறைப்பார்கள் சவுடீஸ்பரிமுக்க...ணியே. 76

பொன்னேநீவருவாய் முப்புராரியேநீவருவாய்
பன்னாள்பணிந்தொழுகும் யிந்தப்பாவியின்முன்வருவாய்
அன்னாய்நீவருவாய் யென்னையாளவே நீவருவாய்
மின்னார்வல்லங்கிவாழ் மீனாம்பிகையேவருவாய். 77

கண்ணேநீவருவாய் வெருகாரணியேவருவாய்
நண்ணார்தம்முடலில் சூலம்நாட்டவேநீவருவாய்
பண்ணேர்சொல்லுடைய பரமேஸ்பரியேமதுரைப்
பெண்ணேநீவருவாய் யென்னைப்பெற்றவளேவருவாய். 78

ஒப்பில்லாமணியேயென்முன் னோடியேநீவருவாய்
துப்பாரிதழ்துரந்து ஒரு தூய்வரந்தருள்வாய்
அப்பன்வேல்முருகன் பழனியானையோடிங்குசவு
டப்பன்முன்வருவாய் சவுடீஸ்பரிதார்குளலே. 79

---

## ஆனந்தக்களிப்பு.

---

சங்கரிதுர்க்கைகங்காளி எங்கள்
சாமண்டிகவுரிசிங்காரி ரீங்காரி
எங்குந்துலங்குமோங்காரி இந்த
ஏழையைக்கார்த்திடுவாயெங்கள்தேவி
பத்தாயிரங்குலத்தோரை மிக்க
பாதுகாப்பேனென்று பண்ணியசரதம்
சுத்தமாய்மரந்தனைபோலும் இங்கு
சுழுவாகத்தெரிகுது தோகையேமானே
பெற்றிடுந்தாயென்றுவுன்னை மிக
பேணியேபூசைகள் செய்திடுமெம்மை
செற்றவர் தூஷனைசெய்து நன்றாய்
சிரிக்கவைக்கலாமோ தேவிசாமண்டி
மாணிக்கதீபமேவாராய் சற்றும்
மறுவென்பதில்லாத மானேநற்றேனே
ஆணிப்பொன்னேமுத்தேமணியே என்றும்
அழிவில்லாதபொருளாகியவமிர்தே
காணக்கிடையாதகனியே நல்ல
கற்பகமேயொளிர்பொற்பதம்நானே
பேணப்பேணத்துயர்வாரி தன்னில்
பிரட்டியுருட்டியழுத்திடலாமோ
[illegible]டும்சத்தமுன்காதில் நன்றாய்
கொள்ளலையோசெழுங் கோமளவல்லி
தோப்புசூழ்வல்லங்கிதன்னில் மிக
துலங்கும்சாமண்டி வொய்யாரிகெம்பீரி
பாலன்சவுடப்பன்போற்றும் தங்க
பல்லாக்கிலேரி பவனிவந்திந்த
ஞாலந்தனிற்றிருமேவ கருணை
நாட்டும்சௌடீஸ்பரி நாயகிபோற்றி தானுதினு.

---

## நொண்டிச்சிந்து.

---

தனனதன தனனு.

தேவர்களுக்காடையளித்த சிறந்த
தேவாங்கர்குலந்தனைக் காக்குமயிலே

சேவடியைத்தொழும்மடியேன் பவந்தனை
சேதிக்கவந்திடும் வீரபரையே
ஜாதிமலர்சிகையழகி வல்லங்கி
சவுடநாயகியே சர்ப்பமணியே
வாதியல்லாதானுனக்கு என்திருக்க
வறுமையிற்படுத்திட வழியுமுண்டோ
பட்சமுடன்வேடுவனெச்சல் தின்றவளை
பாருள்ளவரைக்குன்னை விட்டுவிடுமோ
அச்சமில்லாச்செருப்படியும் பட்டகதை
ஆரறியாருந்தன் வீரத்தனத்தை
வில்லடிகள்பட்டுமெலிந்த உனக்கு
வெட்கமென்பதில்லையோ வேடக்குரத்தி
வல்லபத்தில்மிகுந்தவளென் றெல்லோரும்
வையகத்தில்சொல்வதெல்லாம் பொய்மொழிகளே
செத்தபிணத்திரச்சிதின்று போதாமல்
சிருத்துண்டன்பிள்ளைதனைத் தின்றசிருக்கி
மெத்தமெத்ததலைசுழட்டி பேய்களுடன்
மேலாகவாடலையோ மேட்டிமைக்காரி
குதிரைகளைவிற்குமவனை கூடியே
குமரனைப்பெற்றெடுத்த கொத்துவடத்தி
மதம்பிடித்தவொட்டனுடனே மல்லாடி
மருவவில்லையோவுனக் கறிவுமில்லையோ
பாம்பணிந்தபிடாரன்றனையும் கலந்து
பானைவயிற்றனைதனைப் பயந்தெடுத்தனை
வீம்புகளிற்சிக்கியொருக்கால் ஆண்டியுடன்
வீணுட்டமாடிவெட்கம் கெட்டவளன்றோ
பித்தனையங்கணந்தனையும் பிள்ளையெனப்
பெற்றெடுத்தவுத்தமி யான்பிழைக்கவே
மெத்தமெத்தப்பொருடனையும் யீயாது
மேலாகநடப்பது ஜாலமல்லவோ
எப்படிநீசெய்தபோதிலும் உந்தனை
எசுவேன்வந்தபடி பூசைகள்செய்வேன்
செப்பும்சவுடப்பன்கவிக்கி இரங்கி
தெரிசனைதந்தருளும் தெய்வமணியே தனனதன தனன.



---

## காவடிச்சிந்து

ஆதிமுதலாகிவந்த ஜோதியொளியாயிருந்த
அங்கயக்கண்ணியே வோங்காரியே அரன்
பங்கில்வளர்சங்கரி ரீங்காரியே முன்னம்
அடல்பொரவரு மசுரரைமுடி
படிமிசைபடவடு கவுரியே
அஞ்சுகமேசெஞ்சொலுரை நீலியே இந்த
மஞ்சரிக்கிமிஞ்சுமனு கூலியே.

பாதகியேயென்வறுமை நீதவிர்க்கலாகாதோடி
பாரமுனக்கில்லையொடி மூடியே மிக்க
சீர்பெருகும்தேவருட னாடியே தங்க
பரிபுரமொலி குரைகடலென
பறையொலியதிரிட முடுகியே
பவனிவருமாதரசே அன்னமே எந்தன்
கவலைதீரவந்தருளும் சொர்ன்னமே.

பாடல்பெருவல்லங்கி மாநாடுதழைத்தோங்கிடவே
பாங்குடனேவந்தருளும் கன்னியே தே
வாங்கர்குலந்தாங்கமன முன்னியே எங்கும்
படபடவென குடமுளவொலி
டுகுடுவென துடியடிபட
பம்பைகம்புவும்பரிடம்சேரவே அவர்
அம்பிகையேயென்று துதிகூறவே.

ஆடகமணிமகுட மீதுவரியாதனத்தின்
ஆயிரங்கதிரவர்கள் போலவே பத்
தாயிரங்குலத்தவரை சாலவே வுற்ற
அடரும்வருமை கடிரியநொடிதனில்
கொடியபாதக மடியவே யிருந்
தாளுவாயென்னாளும் பரிபாலியே வெள்ளைக்
காளையேரும்பிச்சை பெருஞ்சீலியே.

சொல்லச்சொல்லமானமுனக் கில்லையென்றாலென்னசெய்வேன்
சோமசுந்தரேசனையும் கூடவே கூடி
காமந்தலைக்கொண்டுவிளை யாடவே யெண்ணி
சோலைகாடுக ளோடுமாமலை
மேலையேரி யேகுலாவிய

சூத்திரம்செய்வதுமக் கா... துயர்
தீர்த்திடாவிலுன்னை விட்டுப்போகுமோ.

பத்தன்சவுடப்பனுன்னை நித்தம்பணிந்தேத்துவதைப்
பார்க்கவில்லையோ பத்ரகாளியே மன
மேர்க்கவில்லையோ யுத்தமீளியே மிளிர்
பாதிமாமதிமீதுசூடிய
வேதநாயகனோடுகூடிய
பார்வதிபஞ்சாட்சரி யென்னம்மையே வந்து
ஓர்மொழிசொல்லஞ்சலென்று செம்மையே.

---

## ஒயில்கும்மி.

---

வானமளாவுபொன் பூமலர்ச்சோலைசூழ் வல்லங்கிவாழும் சௌடீஸ்பரியை
வந்தனைசெய்வோர்கள்மிக
விந்தையுடன்வாழ்வதொடு
வாணியருள்வந்து வாய்த்திடுமே.

இந்திரைவந்துயிருந்திடுவாழ்வெகு மைந்தரும்வந்து வளர்ந்திடுவார்
இன்பம்பெருகும்பெருகும்
துன்பங்குறையும்குறையும்
இலகியவுலகினிற் றிலகராவார்.

வாலைபுவனைதிரிபுரையோடும் வருகியைநித்தம் பணிபவர்க்கு
வயதும்ஜெயமும்பொருளும்
வயலும்செயலும்பெருகும்
வந்தித்துக்கும்மியடித்திடுவோம்.

சாலோகசாமீப சாரூபசாயூட்சியம் சாரும்எழிதிற் சந்தேகமில்லை
சட்டமுடனிட்டுமலர்
திட்டமுடன்போற்றிடுவோம்
சல்லாபவுல்லாச வில்லாசரே.

வானவர்வந்தடி போற்றிவரந்தனை வாங்கியங்கேகுவார் வண்மையொடு
வஞ்சகமும்நெஞ்சமதிற்
கொஞ்சமுமில்செஞ்சொலதில்
வாழ்த்தியேகும்மி யடித்திடுவோம்.

தேடக்கிடையாதவெள்ளியிர்தமெங்கள் தேவலன்றன்மைபிற்சிக்கினதோர்
தேவியையிங்காவலொடு
யேவருமிக்கோவிலதில்
தெளிவுடன்பூசைகள் செய்திடுவோம்.

வில்மதியாதிரை நாடனிலேயெங்கள் விமலியைத்தண்டிகை மீதிருத்தி
வீரத்துடனேபவனி
சீருற்றிடவேவருவோம்
வித்தைகள்கற்றிடும் விற்பனரே.

## வேறுமெட்டு.

கொல்லையிற்பூத்திடும்மல்விகைக்குமணம் குன்றுதபோதினுங்குன்றுமென்று
கூறுவார்மூடர் அம்மையைத்
தூறுவார்காடர் நாமழ்
கூடிக்கூடிப்புகழைப் பாடிப்பாடித்தினம்
கொண்டாடவெம்முனம் வந்திடுவாள் எல்லாம்
கொண்டரசாளவும் தந்திடுவாள்.

ஆனமுகவனைஞானபுலவனை அற்புதமாகவேபெற்றெடுத்த
அம்மையுமாவாள் சுகமே
நம்மையுமாள்வள் ஒளிர்
அருமாமறைபொருள்தேடிய தருமாமலர்சிகைசூடிய
ஆதிபராசத்தியந்தரியை பணிவோம்
பூதலநாயகி சுந்தரியை.

நம்பினபேர்களைக் காத்திடுவாளவள் நாடியகாரியம் கூடவைப்பாள்
நன்மையுமாகும் வரும்
தின்மையும்போகும் மிளிர்
நாலும்ஆறும்புகழும் வேலும்வாளும்திகழும்
நாயகிதன்னைத் தினந்துதிப்போம் கள்ளப்
பேயரையெப்பொழுதும் மிதிப்போம்.

சுற்றும்கவிசவுடப்பனைச்சுற்றிய கடியதுயர்களையடியறுத்து
கனவினில்வந்து பொருள்சேய்
கனமொடுதந்து வந்தன்
கடனும்பொடியேபடுமே வுடலும்மிடலாய்வருமே
கலங்கிடவேண்டுவதில்லையென்று சொற்ற
கவுரியைப்போற்றுவீர் கோவில்சென்று.

---

## க லி வெண் பா.

---

சீராருங்கற்பகமே தேடிவைத்தபொற்கிளியே
பாராளவந்ததொரு பைங்கிளியே பேரோங்கும்
வல்லங்கிதேவாங்கர் வந்திக்கும்நவமணியே
வில்லங்கமுழுதகற்றும் வித்தகியே சொல்லோங்கும்
சவுடநாயகிவுமையே ஜகமுழுதுமாண்டவளே
கவுரிமகமாயிபரையே கண்மணியே பவமகற்ற
வல்லங்கிபழயதரை வந்திருக்கும்வாள்மயிலே
சொல்லும்மறைப்பொருளே சோதியே வல்லபத்தி
அடியேனழைப்பதுவுன் னரும்செவியிற்கேள்க்கிலையோ
கொடியேனுக்கருள்புரிதல் குற்றமென்றோ யிடையுடனே
பாதம்வலித்திடுமோ பவுஷும்குறைந்திடுமோ
ஏதென்றுநானறியேன் இளங்குயிலே மாதாவே
வந்தெனைநீயாளாயேல் வாளால்மடிந்திடுவேன்
நிந்தனையும்நீவகிப்பாய் நிர்ம்மலியே அந்தமிகும்
அயிலால்மடிந்திடுவேன் அங்கிதனிற்குதித்திடுவேன்
மயிலேமரகதமே மாமலரே தயவாக
கண்மணியேநீவருவாய் கற்கண்டேநீவருவாய்
பெண்மணியேநீவருவாய் பெட்புடனே எண்ணரிய
மாணிக்கமணிவிளக்கே மாசுபடாசித்திரமே
ஆணிப்பருமணியே அஞ்சுகமே ஞானமிகும்
தேனேதெள்ளமிர்தே தேடிவைத்ததிரவியமே
மானேயிவண்வருவாய் மலர்க்கொடியே போனவனும்
வருவதில்லையென்றவர்முன் வண்மையுடனழைத்துவந்து
பெருமையுடனிருத்திவைத்த பேரொளியே அரிய துயர்
அடர்ந்திடவும்ஜீவனையான் அகற்றிடவேயெண்ணுகயில்
துடர்ந்தெனையும்தடுத்தனையே தாய்மறையைக் கடந்தவளே
பாதகராம்சிலர்களென்னைப் பரிகாசம்பண்ணிமிக
வேதனைசெய்தலட்டுகிறார் விதம்விதமாய் ஓதுகிறேன்
எதற்கென்றுயானும் பயந்திருப்பேனிப்புவியில்
சதிப்போர்க்குவேல்விடுக்கும் சத்தியே மதிப்பாக
நித்தம்மலர்கொடுன்னை நேத்தியுடன்பணிவதற்கு
வைத்ததொருகூலிவகை தானோ சுத்தமுள்ள
வேதத்தினுள்ளமைந்த வித்தகிநீயானாலும்
கோதற்றவரனிடத்திற் குடியாகி தீதற்ற
அவனிதனையாண்டவள்நீ யானாலும்அடியவர்க்கு

தவநிலையைத்தந் துமலை தானிருந்து    பவனிவரும்
சாமண்டியானாலும் சவுடநாயகியாகி
பூமண்டலம்புகழ பெயர்பூண்டு    தாமண்டும்
சத்தியமாய்நிற்பவளே யானாலும்சாம்பவியே
முத்தர்முதலேத்திவரும் மூர்த்தியே    சத்துருவின்
நெஞ்சகத்தில்வேல்விடுத்து நிணக்குடலைத்தான்பிடுங்கி
யெஞ்சலிலாதெனைக்காரும் யீஸ்பரியே    அஞ்சுகமே
யென் துயரை நீக்காதிருப்பாயேயாமானால்
வுன்பெருமையாரறிவார் வுத்தமியே    இன்பமுடன்.
ஆதரிக்காதிருந்தாக்கால் ஆர்தான்மதித்திடுவார்
பூதலத்தோர்பணிகுவறோ பொற்கொடியே    மேதினியில்
எனையாளும்கற்பகமே யீஸ்பரியேயிகபரத்துக்
கனையாகிவீற்றிருக்கு    மம்மையே.

கனமேவுமெனதுகுரு கல்விக்களஞ்சியம் காசிலிங்கம்பிள்ளைசீர்
கல்வியிற்சல்லாப வுல்லாசனாமுத்து சாமிகவிராயரோடும்
சினமின்றியேகல்வி சொல்நல்லுபிள்ளையும் சிவபிரானருடவந்த
சிங்காரஜோதிடக் கடலொடுபுராணமும் சிரப்புடன்வோதிவைத்த
வனமேவுமொன்னகிரி மகிபணிவர்பதமெலா வண்மயாய்சிரசிலேற்றி
வள்ளலாம்சவுடநாயகி திருக்கோவிலின்வணங்கி மஞ்சரியையோதி
தனமோடுகலனாடை தமர்கள்தந்தெந்தனை தழுவினதுரைக்கவென்னால்
தாளாதுவொருவராலாகாது வன்னவர்தழைத்திடுவர் செல்வமோடு.

எமையீன்றதந்தைதாயானசவுடீஸ்பரி இராமலிங்கேசர்வாழி
எருமரிபவழவிக்னேசரும் பொரியோடெழுந்தருளும் மாயன்வாழி
கமைசேரும்தேவலன்மரபில்வரு தேவாங்கர்களத்ரரொடு புத்ரபௌத்ரர்
கணக்கிலாப்பொருளோடளப்பருங்காலமும் கவலையற்றிருக்கவாழி
அமையும்வல்லங்கி நகரனைவரும்வாழி யிம்மஞ்சரியையன்பினோடு
அழகாயுரைப்பவர் கேட்பவர்பிரருக்கு அறியவேயுரைத்தபேரும்
தமையுற்றதீவினைக டமைநீக்கிவுலகினிற் றழைத்திடவும்வாழியெங்கும்
தர்ம்மமும்மறைநீதி சத்யமொடுவித்தையும் தானோங்கவாழிவாழி.

சுபம்.

முற்றிற்று.

